கஷ்டமான நிலையை ஆராய்ந்து பார்த்து ஒரு அறிக்கை அரசாங்கத்திற்குக் கொடுத்தார்கள். அதே சமயத்தில் மீண்டும் ஒரு வாரத்திற்குப் பிறகு அங்கு இருக்கக் கூடிய அதிகாரிகளையும், விவசாய இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகளையும் அழைத்து மதுரையிலேயே அதிகாரிகளின் கூட்டம் ஒன்றைப் போட்டிருந்தோம். அவர்கள் புள்ளி விவரங்களை எல்லாம் சேகரித்து நஷ்டம் இவ்வளவு ஏற்பட்டிருக்கும், இதை ஒழிப்பதற்குப் பூச்சி மருந்துகளை விநியோகிப்பது, நஷ்டம் அடைந்தவர்களுக்கு உதவுவது என்று திட்டவட்டமாகப் பல யோசனைகளைச் சொன்னார்கள்.

**SRI M. KALYANASUNDARAM** : நாங்கள் அறிந்த மட்டில் திரு. மூக்கையதேவர் அவர்கள் கனம் ராமையாவைப் பற்றிச் சொல்லவில்லை. அப்படியே இருந்தாலும் ரூல் 41 படி ஸ்டேட்மெண்டு கொடுக்கலாம். அதைவிட்டு இவ்வளவு நீண்ட பிரசங்கம் செய்ய வேண்டுமா ?

DEPUTY SPEAKER : The Hon. Minister perhaps wants to explain his position clearly.

**THE HON. SRI V. RAMAIAH** : எல்லாப் புள்ளி விவரங்களையும் வைத்துக்கொண்டு முடிவு எடுக்க வேண்டியிருந்தது. திரு. கல்யாணசுந்தரம் இங்கே கவனிக்க வேண்டும்—இதுவரையிலும் அந்தப் பகுதியில் கம்பளிப் பூச்சித் தொந்தரவினால் ஏற்படுகிற கஷ்டங்களை ஜனங்களே அனுபவித்து வந்தார்கள். அரசாங்கத்தின் கவனத்திற்கே வந்தது இல்லை. ஆனால் இந்த முறை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரச் செய்தேன். அதிகாரிகளும் சில சிபார்சுகளைச் செய்தார்கள். உசிலம்பட்டி, நிலக்கோட்டை முதலிய பகுதிகளில் கம்பளிப்பூச்சி ஒழிப்பு நடவடிக்கையும், நிவாரண வேலைகளும் எடுத்துக் கொள்ளப்பட்டன. அந்த வட்டார மக்கள் எவ்வளவு நன்மை அடைந்திருக்கிறார்கள் என்பதை அந்த வட்டார மக்களைக் கேட்டால் தெரியும். கனம் மூக்கைய தேவர் அவர்களுக்குத் தெரியுமோ என்னமோ ரூல் 41 படி திரு. சந்திரசேகரன் அவர்கள் கேட்டதற்கு கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த விரிவான அறிக்கையையும் அவர்கள் பார்க்கவில்லை. அதனால் தான் இத்தகைய உபகேள்வி கேட்டார்கள் என்று நினைக்கிறேன்.

DEPUTY SPEAKER : The Hon. Minister may finish his speech soon.

**THE HON. SRI V. RAMAIAH** : Yes, Sir, I want to put an end to this kind of propaganda. கனம் மூக்கைய தேவர் அவர்களுக்குத் திருப்தி ஏற்படாவிட்டாலும் விவசாயிகளுடைய கஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்காக அந்தப் பிரச்சனையைப் பரிசீலனை செய்து என்னால் முடிந்ததைச் செய்திருக்கிறேன் என்று நான் நினைக்கிறபோது நான் சந்தோஷமே அடைகிறேன்.

**SRI S. MOOKIAH THEVAR** Rose.

DEPUTY SPEAKER : There cannot be a discussion on the matter. The hon. Member may resume his seat.

## IV. DISCUSSION UNDER RULE 57, VIZ., ALIENATION OF GOVERNMENT PORAMBOKE LANDS, AT SUBRAMANIAPURAM (GOLDEN ROCK PANCHAYAT) TO MESSRS. T. V. S. AND SONS.

DEPUTY SPEAKER : Hon. Member Sri M. Kalyanasundaram has given notice under Rule 57 of the Assembly Rules to raise a discussion on an urgent matter of administration, viz., the alienation of Government Poramboke lands at Subramaniapuram (Golden Rock Panchayat) to Messrs. T. V. S. & Sons, depriving the Panchayat of its claim over the lands. Sri M. Kalyanasundaram may now speak.

21st August 1961]

**Sri M. KALYANASUNDARAM**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரச்சனையானது மிகவும் முக்கியமானது. பஞ்சாயத்து ஆட்சி, இன்னும் நம்முடைய கிராமப் புறத்தின் அபிவிருத்தி ஆகியவற்றில் மிகவும் அக்கறை கொண்டிருக்கிற நமது அரசாங்கம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய பிரச்சனை இது என்பதனால் இதை ரூல் 57 படி இங்கே ஒரு நாள் விவாதத்திற்கு எடுத்துக் கோள்ள வேண்டுமென்று நான் வற்புறுத்த வேண்டியதாக ஆயிற்று.

டி.வி.எஸ். பஸ் முதலாளிகள் நம் ராஜ்யத்தில் பஸ் தொழிலில் முதல் ஸ்தானம் வகிக்கக் கூடியவர்கள். பெரிய ஏகபோக முதலாளி என்பது நாம் அனைவரும் அறிந்ததே.

அவர்கள் தொழில் நடத்த வசதி செய்து கொடுக்கக் கூடாது என்று நான் சொல்லவில்லை. அவர்களும் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டுத்தான் தொழில் நடத்த வேண்டும், எவ்வளவு செல்வாக்கு உள்ளவர்களாக யிருந்தாலும் சரி, அல்லது எவ்வளவு பணம் உள்ளவர்களாகயிருந்தாலும் சரி, சட்ட திட்டங்களுக்கு உட்பட்டுத்தான் தொழில் நடத்த அனுமதி கொடுக்க வேண்டுமே தவிர சட்ட திட்டங்களைப் புறக்கணிக்கக் கூடிய முறையில் அதிகாரிகள் யார் உத்தரவு பெற்றுச் செய்தார்கள் என்று தெரியாது. இப்படிச் சில அதிகாரிகள் எடுத்திருக்கும் நடவடிக்கைகளை நான் அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். பொன்மலை பஞ்சாயத்து பிரதேசத்தில் புதிதாக சென்னையிலிருந்து மதுரைக்குப் போகக் கூடிய பெரிய ரோடு திருச்சி நகரினுள் பிரவேசிக்காமலேயே போகக்கூடிய சாலை அமைந்து கொண்டிருக்கிறது. காவேரி ஆற்றின் மேல் பாலம் கட்டி பூர்த்தி செய்து விட்டால் திருச்சி நகரில் பிரவேசிக்காமலே நேரடியாக சென்னையிலிருந்து இந்தச் சாலை மூலம் வெகு துரிதமாகவும், சுலப மாகவும் போய்ச் சேர முடியும். ஆகவே இந்த ரோடு இப்பொழுது ரொம்பவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகி விட்டது. அந்த ரோடிற்கு அருகில் டி.வி.எஸ். முதலாளிகளுக்கு எப்படியாவது ஒரு நல்ல இடம் வேண்டும். அவர்களுடைய பஸ் போக்குவரத்திற்கு இந்த ரோடு மிகவும் அவசியம். திருச்சிக்கு புதுக்கோட்டை மார்க்கமாகவும், மதுரை மேலூர் மார்க்கமாகவும், திண்டுக்கல் மார்க்கமாகவும் போகக் கூடிய ரஸ்தாக்களின் சந்திப்பாக அந்த ரோடு இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே இந்த ரோடில் முக்கிய இடம் வேண்டுமென்று டி.வி.எஸ். முதலாளிகள் கடந்த நாலைந்து வருடங்களாகவே பலவிடங்களில் முயற்சி செய்து கொண்டிருந் தார்கள். பொன்மலை பஞ்சாயத்திற்கு ''தினசரி மார்க்கட்'' கட்டுவதற்காக ஒரு இடமும், பார்க் அமைப்பதற்காக ஒரு இடமும் ஒதுக்க வேண்டுமென் றும் உள்ள ஆலோசனை அரசாங்கத்தின் கவனத்தில் இருந்து வந்தது. இது இரண்டும் திருச்சியிலிருந்து புதுக்கோட்டை போகும் ரோடிற்கு இரு புறத்திலும் இருக்கக் கூடியது. மார்க்கட்டிற்காக கேட்ட இடத்தை பொன் மலை மார்க்கட்டிற்குக் கொடுக்க வேண்டுமென்று ரெவின்யூ போர்ட்டால் சிபாரிசு செய்யப்பட்டிருந்த காரணத்தினால் அதை நேரடியாக டி.வி.எஸ். க்கு கொடுக்க முடியவில்லை போலும். எதிர்த்தாற்போல், ஜமால் மொஹ மட் காலேஜை யொட்டியும், சிலோன் லேபர் கமிஷனர் ஆபீசுக்கும் இடையே இருக்கக்கூடியது வெகு முக்கியத்துவம் வாய்ந்த இடம். திருச்சியிலிருந்து புதுக்கோட்டை போகும் ரோடு, திருச்சியிலிருந்து திண்டுக் கல் மேலூர் போகக் கூடிய ரோடு இவைகளை இணைக்கக்கூடிய இடம். அந்த இடம் சர்க்கார் புறம்போக்கு. 2 ஏக்கர் 3 செண்ட். இது, ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்டுக்கு வொர்க்ஷாப் கட்டுவதற்கும், பஸ் நிறுத்த டிப்போ கட்டவும் கோரப்பட்டிருந்தது. அதற்காகக் கட்டிடம் கட்ட ஸ்கெச் தயார் செய்து எஸ்டிமேட் போட்டு அரசாங்கம் இறுதியாகக் கூட முடிவு எடுத்து விட்டது என்று கூறலாம். அந்நேரத்தில் அந்த இடத்தை டி.வி.எஸ்.-க்குக் கொடுத்து விடுவது என்றால்? ஏனெனில் பஞ்சாயத்து மார்க்கட்டுக்கு என்றுள்ள இடத்தை டி.வி.எஸ்.-க்கு கொடுத்து விட்டால் அது ரொம்பவும் பச்சையாகயிருக்கும். ஆகவே, ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்டுக்கு ஒதுக்கியிருந்த இடத்தை டி.வி.எஸ்.-க்கு கொடுத்து விட்டு பஞ்சாயத்து தினசரி மார்க்கட்

[Sri M. Kalyanasundaram] [21st August 1961

கட்ட ஒதுக்கியிருந்த இடத்தை ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்டுக்கு கொடுக்க வேண்டுமென்று சில அதிகாரிகள் முடிவு எடுத்து விட்டார்கள். இத் திட்டங்கள் எப்பொழுது என்னென்ன காரணங்களால் உருவாயிற்று என்று கவனிக்க வேண்டும். அந்த இடத்தை டி.வி.எஸ்.-க்கு மாற்றிக் கொடுத்து விட்டால் அரசாங்கத்தின் எண்ணம் வெளியாகிவிடும் என்று நினைத்தோ என்னவோ அதிகாரிகளுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அரசாங்கத்திற்கு தேவையாகயிருக்கிற இடத்தை டி.வி.எஸ். அரசாங்கத்திற்குக் கொடுத்து உதவ முன் வருவதுபோல் ஒரு நாடகம் நடத்துவது என்று. திருச்சியில் ஹரிஜன் ஹாஸ்டல் ஒன்று நடந்து கொண்டிருக்கிறது. அந்த இடத்தை டி.வி.எஸ். முதலாளி விலைக்கு வாங்கி அதை அரசாங்கத்திற்கு கொடுத்து அதற்குப் பதிலாக இந்த இடத்தை அரசாங்கம் டி.வி.எஸ்.-க்கு மாற்றுக் கொடுப்பதாக ஒரு முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறது. ஹரிஜன ஹாஸ்டல் நல்ல இடத்தில் கட்டப்பட வேண்டுமென்பதில், இரு அபிப்பிராயம் கிடையாது. அதற்கு இடம் வேண்டுமென்றால் இதை விட நல்ல இடம் திருச்சியில் சர்க்கார் கையில் இருக்கிறது. கன்டோன்மெண்ட் பகுதியில் 4 ஏக்கருக்குக் குறையாமல் அரசாங்கத்தினிடம் இருக்கிறது. அங்கு கட்டினால் பல கல்லூரிகள், பல உயர்நிலைப் பள்ளிகளுக்கு அருகாமையில் இருக்கும். ஹரிஜன மாணவர்களுக்கும் போக வர சௌகரியமாகயிருக்கும். அதற்கும் பதில் டி.வி.எஸ். ஓர் இடிந்த இடத்தை வாங்கி ஹரிஜன மாணவர்களுக்குத் தானம்கொடுப்பதாகச் செய்து அதற்குப் பதிலாக இந்தச் சர்க்கார் புறம்போக்கு நிலத்தை பஞ்சாயத்திற்கு பார்க் கட்ட ஒதுக்க வேண்டுமென்றிருந்த நிலத்தை டி.வி.எஸ்.-க்கு கொடுக்க முடிவு எடுக்கப்பட்டது. இவையெல்லாம் மறைமுகமாக நடந்து கொண்டிருக்கிறது. உண்மையில் ஹரிஜன மாணவர்களின் தேவைக்காகச் செய்யப்பட்டிருந்தால் அது வேறு விஷயம். அதை ஆட்சேபிக்க மாட்டேன். ஹரிஜன் ஹாஸ்டல் கட்ட எவ்வளவோ இடம் இருக்கிறது. அங்கு கட்டியிருக்கலாம். ஆனால் டி.வி.எஸ்.-க்கு இந்த இடத்தைக் கொடுக்க வேண்டுமென்பதுதான் உள்நோக்கம். இன்னொரு நோக்கமும் இருக்கிறதோ என்னவோ? கோல்டன் ராக் பஞ்சாயத் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள் பெரும்பான்மையாக உள்ள பஞ்சாயத்து. சில அமைச்சர்கள் அங்கு சுற்றுப்பிரயாணம் செய்யும்போது கம்யூனிஸ்ட் தேர்ந்தெடுத்தால் ஒன்றும் நடக்காது என்று பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார்கள். கோல்டன் ராக் பஞ்சாயத்திற்கு தினசரி மார்க்கட் கட்ட அந்த இடத்தை ஒதுக்க ஏழு வருடங்களாக பேச்சு வார்த்தை நடந்து சாங்க்ஷன் ஆகும்போது அதை டிரான்ஸ்போர்ட்டுக்கு கொடுப்பதென்றால், அந்தப் பஞ்சாயத்திற்கு மாற்று இடம் கொடுக்க ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அதிகாரிகளுக்கு நல்லெண்ணம் இருந்திருந்தால் 'மார்க்கட்டுக்கு இடம் கேட்டிருக்கிறார்களே, அதற்கு என்ன செய்ய' என்று வலை எடுத்திருக்க வேண்டும். அப்படி அவர்கள் கவலை எடுத்ததாகத் தெரியவில்லை. 15-3-61-ல் திருச்சிராப்பள்ளி ஆர்.டீ.ஓ. எழுதியிருக்கிறார் தாசில்தாருக்கு, அந்த நிலத்தைப் பஞ்சாயத்துக்கு மாற்றிக் கொடுத்துவிங்கள் பூங்காவிற்கு என்று உத்தரவும் போட்டிருக்கிறார்கள். அந்தக் கடிதத்தின் நகல் என்னிடமிருக்கிறது. அதன் எண் எல்லாம் என்னால் கொடுக்க முடியும். மார்ச் 14-ம் தேதி உத்தரவு போடுகிறார்கள், எப்ரல் மாதம் 6-ம் தேதி அரசாங்க உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது. அதை டி.வி.எஸ்.-க்கு மாற்றிக் கொடுங்கள் என்று. பஞ்சாயத்தை ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா? 1958-வது சட்டப்படி பார்த்தால் அந்த நிலத்தைப் பஞ்சாயத்திற்கே கொடுக்க வேண்டும், அவர்களுக்கு உரிமையுள்ள இடம். பஞ்சாயத்தை கேட்காமல் பராதீனம் செய்யக்கூடாது. அப்படியிருந்தும் டி.வி.எஸ். குறுக்கே நின்றதால், அவர்களுக்குத் திருச்சியில் ஒரு நல்ல இடம் இருக்க வேண்டுமென்று செய்யப்பட்டது. அங்கு டிரான்ஸ்போர்ட் வொர்க்ஷாப் அல்லது டிப்போ கட்டியிருக்கலாமே. பொன்மலை பஞ்சாயத்து மார்க்கட்டிற்காக ஒதுக்கப்பட்டிருந்த நிலத்தை ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்டுக்குக் கொடுத்து விட்டு இந்த நிலத்தை டி.வி.எஸ்.-க்குக் கொடுத்திருக்கிறார்கள். இப்படி தனிப்பட்ட முதலாளிகளின் சௌகரியத்திற்காக செய்வதில் எப்படி வேண்டுமானாலும் அரசாங்கம் செய்யலாம் என்ற

எண்ணத்தினுல் ஏற்பட்டதா அல்லது அஜாக்கிரதையால் ஏற்பட்டதா என்று அறிய விரும்புகிறேன். அஜாக்கிரதையால் ஏற்பட்டதல்ல இது. டி.வி.எஸ். ஐந்து ஆண்டுகளாக முயற்சித்துக் கொண்டிருக்கிருர்கள். இந்த இடத்தை மாற்றிக் கொடுக்க முடியாது என்று பஞ்சாயத்திலிருந்து அதிகாரிகளிடமும், டி.வி.எஸ். முதலாளிகளிடமும் சொல்லப்பட்டது. அப்படியிருக்க, டி.வி.எஸ்.-க்கு சௌகரியம் செய்ய வேண்டியது அவசியம் என்ற எண்ணத்தை அதிகாரிகளுக்கு யார் உண்டாக்கியிருக்கிருர்கள் என்று பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது ஒதுக்கப்பட்டுள்ளது, ஜமால் மஹமத் காலேஜ் காம்பவுண்டுக்கு ஒட்டியிருக்கக்கூடியது. அந்தக் காலேஜுக்கு காம்பவுண்ட் கூட கிடையாது. வேலியோடு சேர்ந்து 2 ஏக்கர் 3 செண்ட் இருக்கிறது. அங்கு செண்ட் விலை 250 ரூபாய். விலை ஒருபுறம் இருக்கட்டும். அது, காலேஜிக்கும் முக்கியம், பஞ்சாயத்துக்கும் முக்கியம். அங்கு பஞ்சாயத்து ஒரு பூங்கா அமைத்தால் மாணவர்கள் மாலை நேரங்களில் உட்கார வசதியாகயிருக்கும். பக்கத்தில் சர்க்கார் காரியாலயங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஹைவேஸ் சூப்பரன்டென்டிங் என்ஜினியர் காரியாலயம் இருக்கிறது. பின்னர், டூரிஸ்ட் ஹோம் இருக்கிறது. முக்கியமான இடம், அது. ஒரு பக்கம் ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்டுக்கும், இந்தப் புறத்தில் டி.வி.எஸ்.-க்கும் கொடுத்தாகிவிட்டது.

அப்போது பஞ்சாயத்தின் நிலை என்ன? பஞ்சாயத்துக்கு மாற்றிடம் கொடுக்க ஏற்பாடு உண்டா இல்லையா? இது தான் பஞ்சாயத்துகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரமும் அதிகாரமுமா? ஏழு வருஷமாக நான் பெரு முயற்சி செய்து ரெவின்யூ அமைச்சர்களிடமும், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களிடம் சென்று இதற்கான நடவடிக்கை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறோம். உண்மையில் இதன் மீது ஏதாவது முடிவு எடுக்க வேண்டும் என்ருல் கலெக்டர் அவர்கள் பஞ்சாயத் போர்டு தலைவர் அவர்களிடம் கேட்டிருக்க வேண்டும். அப்படியில்லையென்ருல் பஞ்சாயத் போர்டு எதற்கு, பஞ்சாயத்து யூனியன் எதற்கு, டெவலப்மெண்ட் கௌன்சில் எதற்கு? இவைகளை எல்லாம் எதற்காக ஏற்படுத்த வேண்டும் என்று கேட்கிறேன். இந்த மாதிரி பிரச்னைகள் வரும்போது முக்கியமாக பஞ்சாயத்து போர்டைக் கேட்டு முடிவு எடுத்திருக்க வேண்டும். அப்படியொன்றுமில்லாமல், ஒரே நாள் ராத்திரியில் மாற்றி விட்டார்கள். மறு நாள் பார்த்தால், இந்த இடத்தில் வேலி போட்டு "ஸைட் ஃபர் ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்" என்றும் இன்னொரு இடத்தில் "ஸைட் ஃபர் டி.வி.எஸ். அன்ட் ஸன்ஸ்" என்றும் போடப்பட்டிருக்கிறது. இதில் டி.வி.எஸ்-க்கு கொடுக்க வேண்டுமா என்பது தான் முக்கியம். ஏதோ டி.வி.எஸ். ஹரிஜன ஹாஸ்டல் கட்டுவதற்காக இடம் கொடுத்து விட்டார்கள், அதை ஏதோ தானம் போல் கொடுத்து விட்டது மாதிரியும், அதற்குப் பதிலாக அரசாங்கம் இதைக் கொடுக்க கடமைப் பட்டிருப்பதாகவும் சொல்லுவது விசித்திரமாக இருக்கிறது. வேண்டுமென்ருல் நேரிடையாகக் கொடுக்கட்டும். இது நியாயம் தாஞ என்பதை யார் வேண்டுமாஞலும் வந்து பார்க்கட்டும். எந்த அமைச்சர்கள் வேண்டுமாஞலும் வந்து பார்க்கட்டும். இவ்விதம் டி.வி. எஸ்-க்குக் கொடுத்தது நியாயம் தாஞ என்று. நாட்டில் ஜனநாயகம் தான் தழைத்தோங்குகிறது என்று சொல்லுகிருேம், அதே நேரத்தில் ஜனங்களிடம் இதைப்பற்றி அபிப்பிராயம் ஒன்றும் கேட்காமல் இவ்விதம் முடிவு எடுக்கப்படுகிறது. இதைப்பற்றி ஜனங்களிடம் அபிப்பிராயம் கேட்க வேண்டாமா? பஞ்சாயத்தினுடைய அபிப்பிராயம் என்னவென்று கேட்கவேண்டாமா? அதைப்பற்றி ஒன்றும் கேட்காமல், ஹரிஜன ஆஸ்டலுக்கு என்று டி.வி.எஸ். இடத்தை கொடுத்திருப்பதாகவும் அதற்காக இந்த இடத்தை டி.வி.எஸ்.-க்கு கொடுத்திருப்பதாகவும் உத்தரவு எல்லாம் போட்டாய் விட்டது. அதன் பின்ஞல் தான் இந்த விவரங்கள் எனக்குத் தெரிய வந்தது. அதன் பிறகு அமைச்சர் அவர்களையும், அரசாங்க அதிகாரிகளையும் போய் பார்த்தோம். பஞ்சாயத்துக்குக் கொடுக்கலாம் என்று முன்ஞல் சொல்லியிருந்தார்களா என்று இப்போது தான் இங்குள்ள அதிகாரிகள் கேட்கிருர்கள். அப்படியென்ருல் ஆர்.டி.ஒ. எப்படி உத்தரவு கொடுத்தார்? அவர் கொடுத்த லட்டரின் எண், தேதி எல்லாம் என்னிடமிருக்

கிறது. ஆகவே கொஞ்சம் கூட இதில் ஜனங்களின் எண்ணமோ, அல்லது நன்மையோ இல்லை. முக்கியமாக அரசியல் துவேஷம் தான் இதற்கு காரணமாய் இருக்கலாம். இரண்டு காரணங்கள் இருக்கலாம். ஒன்று டி.வி.எஸ்.-க்குக் கொடுக்கவேண்டும் என்பது, இரண்டு கம்யூனிஸ்ட் ஆதிக்கத்திலுள்ள பஞ்சாயத்துக்குக் கொடுக்கவேண்டாம் என்பது. எப்படியானாலும் இந்த இரண்டும் அக்கிரமம்தான். இதையெல்லாம் செய்து விட்டு வெளியில் ஜனநாயகம் தழைத்தோங்குகிறது, எதிர்க் கட்சிகளுக்கு எல்லாம் பூரண சுதந்திரம் கொடுத்திருக்கிறோம், என்ன வேண்டுமானாலும் விமரிசனம் செய்வதற்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோம், சோவியத் ரஷ்யா போன்ற நாட்டில் தான் ஒரே கட்சி ஆதிக்கம் நடக்கிறது, இங்கு பரிபூரண சுதந்திரம் நடக்கிறது என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அப்படியானால் பஞ்சாயத்துக்குக் கொடுத்த அதிகாரத்தை மதிக்கவில்லையே, ஏதோ அவர்களைச் சார்ந்தவர்களுக்கு வேண்டியதை கொடுத்துவிட்டு, பார்த்தீர்களா கம்யூனிஸ்டு தலைவர்கள் எல்லாம் சட்டசபையில் வந்து உட்கார்ந்திருக்கிறார்களே, அவர்களால் எதையாவது செய்ய முடிந்ததா பாருங்கள் என்று வேண்டுமானால் வெளியில் போய் பிரச்சாரம் செய்யலாம். உண்மையிலேயே இதில் அரசியல் நோக்கம் இருக்கிறது என்று தான் நான் கருதுகிறேன். இவர்களுக்கு டி.வி.எஸ். போன்ற பெரும் முதலாளியின் உதவி தேவை என்பதற்காகத்தான் இது கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்போதும் காலம் தாழ்ந்துவிடவில்லை. அவர்கள் இன்னும் கட்டிடம் கட்ட ஆரம்பிக்கவில்லை. வேலிதான் போட்டு வைத்திருக்கிறார்கள். டி. வி. எஸ். வேண்டுமானால் சென்டுக்கு ஆயிரமோ இரண்டாயிரமோ கொடுத்து வேறு வாங்கிக் கொள்வார்கள். இப்போது தினசரி மார்க்கட்டுக்கு என்று கேட்டிருந்ததை ஸ்டேட் டிரான்ஸ்போர்ட்டுக்கு என்று எடுத்திருக்கிறார்கள். வேண்டுமென்றால் அதைவேண்டுமானால் வைத்துக்கொள்ளட்டும். ஆனால் டி. வி. எஸ். க்கு கொடுத்திருக்கும் இடம் பூங்காவுக்கு என்று கேட்டிருந்த இடம், ஆகவே அதையாவது ரத்து செய்யுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். டி. வி. எஸ் வாங்கியுள்ள இடத்தை தான் ஆஸ்டலுக்கு எடுக்க வேண்டும் என்றால் லாண்ட் அக்விஷிஷன் ஆக்ட் மூலம் அதை எடுத்துக்கொள்ள முடியாதா என்ன? அதல்லாமல் ஏதோ டி.வி.எஸ். சர்க்காருக்குத் தானம் செய்தது போலவும், அதற்காக டி.வி.எஸ்-க்கு. சர்க்கார் இடம் கொடுக்க கடமைப்பட்டிருக்கிறார்கள் போலவும் சொல்லுகின்ற நாடகம் மட்டும் வேண்டாம் என்று தான் நான் கேட்டுக் கொள்கிறேன். இதைப்பற்றி சரியான பரிசிலனை செய்ய வேண்டும். அதோடு இப்பேர்ப்பட்ட மோசடிக்கு யார் பொறுப்பாளிகள் என்பதையும் சர்க்கார் விசாரணை செய்ய வேண்டும் என்பது என்னுடைய பணிவான வேண்டுகோள். இவ்விதம் பஞ்சாயத்துக் கென்று ஒதுக்கியிருந்த இடத்தை டி. வி. எஸ். க்கு அபகரித்துக் கொடுத்துவிட்டால் பஞ்சாயத்தினுடைய கதி என்ன? பஞ்சாயத்துக்கு எப்போது எங்கே நிலம் வாங்கிக் கொடுக்கப்போகிறீர்கள். இனிமேல் வாங்கிக்கொடுக்கலாம் என்று சொல்லுவது நம்பக்கூடிய விஷயமா? அல்லது இப்போது ஏதோ இங்கு சத்தம் போட்டுக்கொண்டிருக்கிறார்களே, அதை இப்போதைக்கு திருப்தி பண்ணி விடலாம் என்கிற நோக்கமா? அல்லது எதிர்கட்சியில் செல்வாக்கு இருக்கிறதே, அதை ஒடுக்குவதற்காக செய்யப்பட்ட வேலைகளா என்று தெரியவில்லை. எந்த விதத்திலும் இம்மாதிரியான நடவடிக்கை எடுத்திருப்பது அக்கிரமமானது. ஆகவே இதைப்பற்றி விசாரணை செய்து இந்த இடங்களைப் பஞ்சாயத்துக்கு பூங்கா அமைக்கவும், தினசரி மார்க்கட் அமைக்கவும் இடம் கொடுக்க வேண்டும் என்பதை அமைச்சர் அவர்களிடம் வற்புறுத்துவதற்காகத்தான் இதை இந்தச் சபையில் கொண்டு வந்தேன் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

*THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் டி.வி.எஸ்.க்கு இடம் கொடுக்கப்பட்டதைப்பற்றி அரசியல் துவேஷம் தான் என்று நினைத்து ஏதோ பிரமையோடு அதன் அடிப்படையிலேயே பேசினார்கள். டி.வி.எஸ்.க்குச் கொடுத்திருக்கிறது அபிஷேகபுரம், தென்குளம் என்கிற இடத்தில், இந்த இடங்கள் அஸெஸ்ட் லாண்டும் அல்ல, புறம்

போக்கு லாண்ட்டும் அல்ல. இது பணம் கொடுத்து வாங்கின இடம் தான். 4 லட்சத்தி 90 ஆயிரம் ரூபாய் கொடுத்து சிலோன் இமிக்கிரேஷன் டிப்பார்ட்மெண்டிடம் இருந்து வாங்கப்பட்டது. அதே நேரத்தில் திருச்சிராப்பள்ளியில் ஒரு ஹரிஜன் ஆஸ்டல் கட்டவேண்டும் என்றும் அதற்காக இடமும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆஸ்டலில் இடம் இருக்கிறது என்பதற்காக ஏரோடிரோம் பக்கத்தில் கொண்டு போய்க் கட்டவும் முடியாது, டவுனில் இருக்க வேண்டும். இதற்காக இடம் கிடைக்குமா என்று பார்த்த சமயத்தில் டவுனில் டி.வி.எஸ். இடம் ஒன்று இருந்தது, அதை கெவர்ன்மெண்டுக்குக் கொடுத்தார்கள். நாம் கொடுத்த நிலத்தை விட இதற்கு விலேயும் அதிகமாகத்தான் இருந்தது. ஏரியாவும் அதிகமாக இருந்தது. அவர்கள் கொடுத்தது 2 ஏக்கரா 2,750 சதுர அடி, நாம் கொடுத்தது 2 ஏக்கர் 1,366 சதுர அடி. இந்த இடம் டவுனுக்கு வெளியேதான் இருக்கிறது. அவர்கள் தந்த இடம் ஆஸ்டல் கட்டுவதற்குச் சௌகரியமாகவும் இருக்கிறது. இப்போது டி.வி.எஸ். கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இடத்திற்குப் பக்கத்தில் ஜமால் மொகைதீன் காலேஜ் இருக்கிறது. இவர்களுக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். அவர்கள் அப்படி ஒன்றும் ஆட்சேபணை பண்ணவில்லை. இது தவிர பக்கத்தில் சூப்பிரண்டன்டிங் இஞ்சினியர் ஆபீஸ், அஸிஸ்டன்ட் இஞ்சினியர் ஆபீஸ் இவைகள் எல்லாம் இருக்கின்றன. இவர்களும் எந்த விதமான ஆட்சேபணையும் சொல்லவில்லை. ஒரு பழமொழி சொல்லுவார்கள், "ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுததாம்" என்று. அதுபோல் அவர்கள் ஒன்றும் ஆட்சேபணை சொல்லவில்லை, கனம் அங்கத்தினர் அவர்கள்தான் இதைப்பற்றி பெரிதாக சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். (குறுக்கீடு) அது மட்டுமல்ல, இந்த நிலம் கொடுக்கப்பட்டது 1-5-61-ல். இதற்காக 13-6-61-ல் தீர்மானம் போட்டு பின்னால் ஆட்சேபணை செய்தார்கள். முதலில் இந்த நிலத்தில் டெல்லி மார்க்கட் வைக்கவேண்டும் என்று கேட்டார்கள். டி.வி.எஸ். கம்பெனி வருவதை விட இது கூடுதல் நியூசென்ஸ்-ஸாக இருக்கும். ஆகவே அதை மாற்றிவிட்டு இதில் பார்க் அமைக்க வேண்டும் என்று பின்னால் கேட்டார்கள். இந்த இடம் கொடுப்பதினால் கஷ்டங்கள் ஒன்றும் வந்து விடாது என்று கருதித்தான் இதைச் செய்தார்கள். இதில் தவறு ஒன்றும் இல்லை. கனம் அங்கத்தினர் அவர்கள் ஏதோ அரசியல் கண்ணோட்டத்தோடு தான் வேறு எதையெல்லாமோ பேசினார்கள் என்று நினைக்கிறேன். நான் சொன்னதிலிருந்து என்ன நடந்தது என்பது தெட்டத்தெளிவாகியிருக்கும் என்று நினைக்கிறேன். இதற்கு மேல் ஒன்றும் சொல்ல வேண்டிய தேவையில்லை என்று நினைக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: On a point of clarification அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள், சர்க்கார் பணம் கொடுத்து வாங்கிய நிலத்திலிருந்துதான் கொடுத்தது என்று சொல்லுகிறார்கள். எப்படி இருந்தாலும் டி.வி.எஸ். கொடுத்திருக்கிற நிலத்தை விட மதிப்பானது. என்னிடம் இதனுடைய சர்வே நம்பர் கூட இருக்கிறது. பணம்கொடுத்து வாங்கிய நிலமாக இருந்தால் எப்படி ஆர்.டி.ஓ. இதை எலியனேட் செய்யலாம் என்று உத்திரவு போட்டார்கள். அமைச்சர் அவர்கள் சொல்வதற்கும் நான் சொல்வதற்கும் வித்தியாசம் இருக்கிறது. அமைச்சர் அவர்கள் பூங்காவிற்குக் கேட்டார்கள் என்று சொல்லுகிறார்கள். இப்போது டி.வி.எஸ்.க்குக் கொடுத்ததைப் பூங்காவிற்கும், ஸ்டேட் டிரான்ஸ் போர்ட்டுக்காக ஒதுக்கப்பட்டுள்ளதை தினசரி மார்க்கெட்டுக்கும் கேட்டார்கள். அமைச்சர் அவர்கள் சொல்லுவது முற்றிலும் உண்மைக்கு மாறாக இருக்கிறது. இருக்கட்டும், பஞ்சாயத்தை ஏன் ஆட்சேபணைகளைக் கேட்கவில்லை? இதைப் பற்றி விசாரிக்கவாவது அமைச்சர் அவர்கள் ஒத்துக் கொள்வார்களா என்று அறிய விரும்புகிறேன். 10 a.m.

THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் அங்கத்தினருக்குக் கிடைத்துள்ள தகவல்கள் அங்கும் இங்கும் விசாரித்துக் கிடைக்கும் தகவலாக இருக்கலாம். நான் கொடுக்கும் தகவல் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கொடுக்கக் கூடிய தகவல்கள்.